சொல்லுவீ ரென்றுசொன்ன பிள்ளாய்கேளு
சொற்பெரிய சதுரங்க விபரந்தன்னை
நல்லுறவா யாடுகின்ற தொழிலைக்கேளு
நமனொருதன் நாராயண னொருத்தனப்பா
வெல்லுதற்குச் சதுரங்கம் சேனையப்பா
வேதனுடன் ருத்திர னு மயேஷனுச்சு
அல்லுறவே அறுபத்து நாலுசித்தும்
ஆடுகிற தொழிலாளி யாடுவானே. (171)

ஆடவே திருக்கூத்து ஆடவேணும்
அம்பலத்தி லகமடக்கி நிற்கவேணும்
பாடவே பராபரையைப் பாடவேணும்
பத்தியுட னொருமலரைக் கொய்யவேணும்
நாடவே சிவன்பதத்தை நாடவேணும்
நன்மையுட னோர்மனதாய்க் கூடவேணும்
கூடவே குருபத்தைக் கூடவேணும்
குருவினுட அருளாலே காணுவாயே. (172)

காணுமென்று யெந்தனக்குச் செல்லிவந்த
கண்ணுதலே யென்குருவே சொல்லக்கேளு
தோணுமென்று தோணுகிற தோற்றஞ்சொல்லும்
தொல்புவியிற் பருவமென்ற மார்க்கஞ்சொல்லும்
ஆணென்றும் பெண்ணென்றுந் திரிவதேது
ஆகாசந் தன்னிலவர் வாழ்வதேது
பூணுமென்ற பூணாரந் தன்னிலாரு
புருஷனென்றும் பெண்டென்ற புதுமைகாட்டே.

காட்டுமென்று யெந்தனைக் கேட்கவந்த
கருத்துள்ள புலத்தியனே சொல்லக்கேளு
நாட்டுமென்று நாட்டிவைத்த உலகுதன்னில்
நல்வினைக்குந் திவினைக்கு மவரேயானார்
பூட்டென்றுந் தாயவளு மவரேயாவார்
புகழான சற்குருவு மவரேயாவார்
பாட்டென்றும் படிப்பென்று மவரேயானார்
பரியாசம் போலல்லோ பகர்ந்தேன்பாரே, (174)

பாரப்பா யின்னமென்று பகரக்கேளு
பாரபரைக்கு உறக்கமில்லை பசியுமில்லை
ஆரப்பா வென்னூல்போற் சொல்லப்போறார்
அய்யருக்கு மப்படியே யாகும்பாரு
காரப்பா குருவருளாற் காணவேணும்
கருத்தாலே காண்பதல்லால் காணப்போமோ
சாரப்பா ஆசானைச் சார்ந்துகாரு
சார்ந்திட்டு வெந்தனுக்குச் சொல்லுவீரே. (175)

சொல்லவே லெகுவாகச் சொல்லவந்தீர்
சொற்பெரிய தாபரத்தில் பெரிதுசொல்லும்
வல்லார்க்கு வல்லவனு யிருந்ததாரு
வடிவான பெண்மாய்கை மயக்கங்காட்டும்
அல்லவர்க்குந் தெய்வமென்று யிருந்தபின்பு
யாவருக்கும் வெவ்வேறாய்ப் பிரிந்ததேது
பல்லவர்கள் பலவிதமாய்த் தியானமேது
பலபாஷை பதினெட்டும் வந்ததேதே. (176)

வந்தவித மின்னதென்று புகலக்கேளு
வல்லவனு யிருந்தசதா சிவனுமப்பா
விந்தமதிற் பள்ளிகொண்டான் தன்னாலப்பா
விதமான மாய்கையடா விரும்பிப்பாரு
அந்தமுள்ள ஆணுக யிருந்தயீஷன்
அருமையுள்ள பெண்மாலா யிருந்தாரப்பா
சந்தமுடன் தாபரமா மாசுவேம்புந்
தனித்தனியே நின்றாக்காற் றர்மமில்லை. (177)

தருமமல்ல வென்றுரைத்த தாணுவேகேள்
தாரணியிற் காவியென்ற வஸ்திரமாரு
கருமமெல்லாந் தீர்த்தசிவ மாலையாரு
கருத்துடனே சந்தனங்கள் புஷ்பமென்ன
வருமமெல்லா மதில்வயித்திய மார்க்கமென்ன
வாலைசன்னி யாசமென்றால் நிற்கா தென்ன
நிருமலம தாய்நிறைந்து திரிவதென்ன
நீதியுடனெந்தனுக்கு நிலைசொல்வீரே. (178)

சொல்லுவீ ரென்றுமென்னைக் கேட்கவந்த
சுந்தரமே சொல்லுகிறேன் கேளுகேளு
அல்லலற நின்றதொரு ஆத்தாளப்பா
அம்பலத்தான் தனக்கீய்ந்தான் பாருபாரு
கல்லுறவே கற்பதற்குக் கையில்மாலை
காளகண்டன் கண்டமடா கண்டுபாரு
சொல்லுறவே சொல்வதற்குச் சோதியான
சொற்பெரிய சந்தனமு மாளுள்பாரே. (179)

பாரேநீ யென்றுசொன்ன குருவேஅய்யா
பகருவே னின்னமுந்தான் பகரக்கேளும்
ஆரென்ன கேட்டாலு மவர்தானென்றீர்
ஐந்தெழுத்து மெட்டெழுத்து மவர்தானுமோ
பாரேநீ சொன்னதெல்லாம் பகுந்துபாரு
பராபரையா ளென்னுச்சி யிருந்தமார்க்கம்
சேரேநீ யென்றுசொன்னீர் சேர்ந்துப்பார்த்தால்
செகசாலக் கூத்தாக யிருந்தாளாத்தாள். (180)

ஆத்தாளைப் பூஜைபண்ண விபாஞ்சொல்லும்
அம்பலத்தான் தனைக்காண மார்க்கஞ்சொல்லும்
பாத்தாலோ சிறுபெண்ணு ளென்றுசென்னீர்
பக்குவத்தை யின்னதென்று பகரவேணும்
சேர்த்தாலோ சிவனுமையுஞ் சேர்க்கச்சொன்னீர்
செகமாய்கை யென்றதெல்லாந் தள்ளச்சொன்னீர்
பாத்தாலோ முப்புரத்தைத் தீயதாக
பார்க்கவதை யின்னதென்று வசனிப்பீரே. (181)

வசனிக்க வேணுமென்று கேட்கவந்த
வணக்கமுள்ள புலத்தியனே சொல்லக்கேளு
வசனித்த சத்தமெல்லாம் வாயுவாச்சு
வழிகாணுக் கோபமெல்லா மக்கினியேயாச்சு
வசனித்த அப்பல்லோ கெருவமாச்சு
வணங்கி நின்ற தொழிலெல்லாம் பிருதிவாச்சு
வசனித்த ஆகாச மழகுமாச்சு
வழிமுன்னே சொன்னதிற்கு விபரங்காணே. ()

காணென்று சொல்லவந்த சாமிநாதா
    காரணமாஞ் சற்குருவே அய்யாஅய்யா
ஊனென்று முறக்கமென்றுஞ் சொல்வதென்ன
    உண்மைகுடி தெய்வமென்று உரைப்பதென்ன
மானென்ற விழியாளைப் பிடித்தாலையா
    மந்தைதனி லேவைத்துப் பார்ப்பதென்ன
வேனென்ற மதன்கல்வி யதுக்குமுண்டோ
    வேதியன்போ லோதும்பூ சாரியாரே. (183)

பூசாரி யாரென்று கேட்கவந்த
    புலத்தியனே யென்மகனே புகலக்கேளு
ஆசாரி யாசையல்லோ அவளுமாச்சு
    அம்மையுட புத்திரனு மவனுமாச்சு
பேசாரி நின்றவளு மகளுமாச்சு
    பேசுகின்ற ஊனுறக்கம் உறவுமாச்சு
வாசாரி வழக்குரைத்தா னொருவனென்று
    வழியறியா மூடர்களு மயங்குவார்கள்
காசாரி விழுந்துதென்றால் கண்ணிற்காணுங்
    கழுதைக்குற லோசைகாதிற் கேட்கும்பாரே.(184)

கேளப்பா யிதுகளெல்லா முலகுதன்னில்
    கேள்வியில்லை வியாசரவர் கட்டிப்போட்டார்
நாளப்பா கழியாமற் பிறந்துமாய்ந்தார்
    நல்வழியைத் தேடாமல் நரகில்வீழ்ந்தார்
பாளப்பா பருமலரைக் கொய்துவந்து
    பராபரத்துப் பாவைதனைப் பணிந்துபின்னும்
வாளப்பா யிரைதேடித் திரிந்தாப்போலே
    வாழ்வேந்தர் கன்னியடா மந்தைகாணே.(185)

மந்தையிலே ஆட்டிவைத்த பூசாரிதானும்
    மதிகெட்டா னவன்தானு மொன்றுங்காணான்
சந்தையிலே கண்டவன்போற் பேசுவான்பார்
    சாட்சிவைத்துப் பேசுதற்குச் சலிக்கமாட்டான்
தந்தைதா யானாலுந் தள்ளமாட்டான்
    தற்கமிட்டுத் தலையசைத்து விழிமிரட்டி
விந்தையாய் வெண்ணீறை யீவானப்பா
    வீம்பான மூடரவர் அனுதிதானே. (186)

அஞதி யாயிருந்த யீசர்தானும் [ஞர்
அம்பிகையாள் தனைப்பார்த்துப் பறைச்சியென்
அஞதியாய் நின்றபறை யுலகுதன்னில்
ஆச்சியா மிவர்தனக்குப் பிறந்தாள்காமி
அஞதிய ய்ப் பலதொழிலா யிருந்தபேர்க்கு
பதவியென்ற மூலமதா யிருந்தாள்கன்னி
சேஞதி சேனைபடை யெடுத்தமாதர்
செகசாலக் கூத்தாக யிருந்தாள் நீலி. (187)

நீலியென்ற கன்னியடா காட்டிற்தெய்வம்
நிமலஞர் புதல்வனடா ஐபஞரு
காளியென்ற துற்கையுடனையன் கூடிக்
கன்னிகையாள் மாரியாய்ப் பிறந்தாரப்பா
கூளியென்ற குறைத்தலைப் பேய்களெல்லாம்
கூட்டுறவாய்க் கூட்டியே உலகுதன்னிற்
பேளியென்ற மார்க்கமதைப் படைத்துவைத்து
பிரபலத்தைக் காட்டிவைத்தார் பிர்மந்தானே.()

பிரமமுனி தவத்தாலே உலகுதன்னில்
பிரபலமாய் நின்ஞர்கள் பெரியோரப்பா
கர்மவினை தீரவல்லோ கைலைநாதர்
காசினியிற் சித்தம்பலம் படைத்தாரீசன்
வ்யமதைச் சாதித்துக் கமலநாதர்
வழிபாடு தெரியாமல் யார்க்கங்கட்டி
தர்மமே தெரியாத தருதலைகள்
தலைகீழாய் வேதமதைப் படைத்தாரய்யா.(189)

அய்யாவே யென்மகனே சொல்லக்கேளு
அறுசமைய மாடுகள் தா னடங்கப்போமோ
மெய்யாகச் சொல்லுகிறேன் வேதமப்பா
யெய்காணக் குருடரைப்போல் விளம்புவார்கள்
கய்யாரச் செய்கின்ற கருமங்காஞர்
காசியினியில் வல்லவர்கள் கலங்குவார்கள்
மய்யாடுங் கன்னியர்தன் ஞறவிஞலே
மதிமோச மாகியல்லோ மயங்குவாரே. (190)

வாரான உலகதனில் மயக்கமாக
 வழிகாட்டு வண்டருட னுறவுதள்ளு
தாரான அண்டத்திற் தாயைப்போலே
 தாய்கிட்டு மென்றுறைத்த தருதலியைத்தள்ளு
பேரான பேய்தெய்வ மென்றுசொல்வார்
 பேய்பிடித்த ஆண்டியுட பெருமைகாணுர்
சீரான தற்கனூல் சொன்னேன்யானும்
 சிறப்பாகு மூலகத்தின் வாழ்க்கைதானே. (191)

வாழ்க்கையடா தேவர்முனி வருக்குமுண்டு
 வழிகாணு மூடருக்கு யில்லையப்பா
கேழ்க்கையிலே கிழவனு யிருந்தாரப்பா
 கேள்விகொண்டு வந்தார்பின் குமரனுனர்
வாழ்க்கையிலே பலதெய்வ முண்டுபொரு
 வழிகண்டா ரெல்லோர்க்குந் தெய்வமில்லை
கேழ்க்கையிலே வேளாளன் கிளையைநாட்டி
 கெம்பீர மாயிபதம் தொழுதான்பாரே. (192)

தொழுதல்லோ வேப்பிலையில் காப்புக்கட்டி
 தோத்திரமும் பூசையது செய்தபேர்க்கு
பழுதொன்றும் வாராம லிருந்துகாத்தாள்
 பராபரைக்கு முகந்தபிள்ளை யவன்தானப்பா
மழுவெடுக்க மனந்துணிந்து யிருந்தானப்பா
 மாடுமேய்க்கப் போனிடத்தே மகிழ்ந்துகண்டான்
தழுக்கெடுத்த பளிங்கிமலைச் சார்புதன்னில்
 தாயாரைக் கண்டெடுத்துப் போற்றிசெய்தான். ()

செய்யவே வேப்படியி லிருந்தாளாத்தாள்
 சிறுபிள்ளை யவன்வீட்டு வேலைக்காரி
பையவே நோய்பிடித்து வந்தபேர்க்கு
 பச்சிலையும் வெண்ணீறுங் கொடுக்கச்சொன்னுள்
நொய்யவே வந்தநோ யெல்லாந்தீர்த்து
 நோன்புபல விரதங்க ளெல்லாஞ்சொன்னுள்
மையாடுங் கன்னியின்மேல் வருவேனென்முள்
 மதிமயக்க மாகவல்லோ திரிகுவாளே. (194)

குலவையிட்டுக் கூக்குரலுஞ் சத்தத்தோடே
கூசாமலில்லறத்திற் பூசைகொண்டு
அலகையென்ற பேய்களுக்குக் கொடுத்தபின்னும்
அம்புகுறி நும்பத்தி லடங்குவேனென்றுள்
அலகையென்ற பூதகணந் தன்னைச்சேர்த்து [பார்
மானிலத்திற் தெய்வமென்று திரிந்திட்டாள்
பலகையென்ற மேருவதை யவனுக்கீய்ந்து
பலகாலம் பூசிக்கப் பூரித்தாள்பாரே. (195)

பாரப்பா பத்திரங்கள் சாத்திப்பின்பு
பணிவிடைகள் செய்ததற்குப் பலனைக்கேட்டான்
காரப்பா குருவருளால் சித்துடுக்கீய்ந்து
கனிசொல்லப் பொற்பிரம்பு யீந்தாளாத்தாள்
ஆரப்பா அவள்சடைதான் பிரப்புமாச்சு
அண்டபிண்ட முஞ்சேர்ந்து உடுக்குமாச்சு
சேரப்பா யீசன்மால் சக்கரத்தைக்கூட
சேர்த்தபின்பு திரிபுரையா ளுடுக்குமாச்சே. (196)

மாச்சப்பா சக்கரத்தை அதனிற்சேரு
மைந்தனே மண்ணடங்காச் சத்தங்காணும்
மூச்சப்பா கொள்வதன்முன் குபேரன்தன்னை
முகமான மேல்தட்டு தன்னில்வைத்து
பாச்சப்பா ஞகமென்ற கயருகொண்டு
பஞ்சகர்தாவை வருமே யிடைவாருக
காச்சப்பா கண்ணனுடன் ருத்திரன்கூட
கைலைமலை பெற்றுளைக் கலந்துகொள்ளே. (197)

கலந்தபின்பு காராளன் கையுடுக்குமாச்சு
கதிரடித்தா லேயளக்கும் படியுமாச்சு
அளந்தபின்பு அவன்கையி லிருந்திட்டாக்கால்
அண்டபகி ரண்டமெல்லா மளக்கும்பாரு
சலந்தனிலே யீப்புகுந்தால் நீஞ்சுமோசொல்
சஞ்சலங்க ளூடருத்த சமையமாறும்
பலந்தனிலே யிதுபலனைக் காணவேணும்
பாக்கியம்வேண் டாதார்க்குப் பரமஞானம்.(198)

ஞானவான் தனக்கும்வன் தெய்வமானுள்
நானிலத்தைக் கார்க்கவல்லோ மாரியானுள்
வானவட வாக்கினிக்கு நின்றசத்தி
வழிமறித்து வழிகாட்டிப் பூசைவாங்க
தானமென்ற தானமெல்லா மிருந்தகன்னி
தையலற்குத் தையலா யிருந்தாளாத்தாள்
கோணமென்ற கோணமெட்டி விருந்தகன்னி
கோதையரைக் காணுத கொடுமைதானே. (199)

கொடுமையென்று சொல்லிவந்த குருவேஅய்யா
கோதையென்ற கன்னியர்க ளெழுவாரு
அடுமையென்று பேர்படைத்துத் திரிவதாரு
ஐவரென்ற ராசாக்கள் தனக்குமுன்னே
படுவரென்ற பட்டவர்த்த னர்களாரு
பாரதத்தில் மாண்டதுவாய்ச் சொல்வதேது
நடுவிருந்த தெய்வமென்று சொல்வதாரு
நல்லபதம் பெற்றஐவர் தெய்வமாமோ. (200)

தெய்வமென்று கேட்கவந்த புலத்தியாகேள்
தேவியென்ற மனோன்மணியாள் திஷ்டிப்பாலே
தெய்வகன்னி யெழுபேரும் பிறந்தார்பாரு
தேசத்தில் சத்தமாத ரென்றுபேரு
அவமென்ற அவையடக்கந் தன்னுல்மைந்தா
அவரவற்குந் தெய்மா யிருந்தாளாத்தாள்
கலமென்ற காளிகண்ணுடி மலையாச்சு
கதிர்சாய்கை மதிசாய்கை ரெண்டுமெங்கே
தவமென்ற தவத்தாலே காணவேணும்
தாயைவிட வேறுமுண்டோ தவத்தோருக்கே.()

தவத்தாலே பெரியோர்கள் தாயைக்கண்டார்
தனியான கன்னியர்கள் எழுபேரும்
அவத்தாலே அவரவர்க ளுலகுதன்னில்
ஆரணியந் தோருமே அலைந்தாரப்பா
தவத்தாலே கண்டவர்கள் கோடாகோடி
தனியான லாடர்தன் முனிவன்தானும்
தவத்தாலே சகலசித்து முடிக்கவென்று
தங்கைமா ரெழுவருட னிருந்தார்காணே. (202)

யிருந்தார்க ளவரவர்க ளொருசமையமாக
யிருளறுக்குந் தெய்மென்று யிருக்கத்தானும்
மறந்தார்க ளெவருமே போனபின்பு
மதிகெட்ட மூடரவர் மாண்டபேரை
யிறந்தவர்கள் வந்தார்க ளென்றுசொல்லி
யிரவுபகல் கொண்டாடி குலவையிட்டு
பறந்தவர்கள் பலகாலம் பறக்கமாட்டார்
பாடுவழி வந்தபின்பு பார்ப்பாரய்யா. (203)

பார்க்கவே பகவதியா யிருந்தாள்பாரு
பரசமய மாறுக்குள் ளிருந்தவல்லி
ஆர்க்கவே ஆதார மானளாத்தாள்
ஐம்பூத மதிலுறவா யிருந்தாள்பாரு
மார்க்கமதை யின்னதென்று சொல்லப்போமோ
மணிநாகம் போலேயல்லோ மகிழ்ந்தகன்னி
தீர்க்கமதை யின்னதென்று செப்பக்கேளுந்
திரோதாயி கூத்தெல்லாஞ் செப்புவோமே. (204)

செப்பவே செகசால மிதுவேயாச்சு
செய்யவே அய்யோத்தி தன்னிலப்பா
கற்பழியா மாதர்கள் மெத்தவுண்டு
கைலை நக மென்பதுவு மதுவேயாச்சு
ஒப்பாரு மில்லாத கன்னியோர்கள்
ஓகோகோ அவர்களெல்லாம் உலகுதன்னில்
மெய்ப்பாக ருத்திரனு ரம்சமாக
வேலான பதவியிலே நின்றார்பாரே. (205)

நிற்கவே அம்பலத்தில் நடனங்காண
நிலவரையிற் பதுங்கியல்லோ நின்றாரப்பா
தக்கவே ருத்திரனர் பார்த்துப்பின்னும்
தாண்டவனு ருத்திரராய் நின்றாரப்பா
மெய்க்கவே கன்னியர்க ளேழுபேரும்
மேலான பதவிவிட்டு விண்ணுக்குள்ளே
வேர்க்கவே திரிந்தார்கள் வெளியிலேதான்
வேதனெனும் பிரமனுக்குச் சிவன்சொன்னாரே.()

சிவன்சொன்ன மார்க்கமதைச் சொல்லக்கேளு
சிறுகன்னி யெழுபேரும் செகத்தின்மீதல்
அவர்சொன்னார் பேய்போலே திரியவென்று
அருள்செய்த படியாலே தேவிகூடல்
திவனென்ற தெப்பையதைக் கையிலேந்தி
திலகமிட்டு நாடுதனிற் றிரிந்தார்பாரு
பவனென்ற செம்படவன் வீட்டிலாத்தாள்
பழிவாங்க வெனப்பிறந்தா ளென்தாய்தானே.()

தாயான தாய்வந்து பிறந்தபோது
தையலர்க ளெழுபேரும் பிறந்தாரப்பா
மாயான மயானருத் திரன்பிறந்தான்
மானிலத்தில் மீனவனை செயிக்கவென்று
பாரான பூமியது குலுங்காமற்கார்த்த
பாலகரெட் டுப்பேரும் பணிசெய்தார்கள்
காயாமல் பழுப்பழுத்த கரியமாலும்
காரணிக்குக் குறிசொல்லக் குழைந்தையானார்.(208)

குறிசொல்லக் குழைந்தையென்று வந்தமாயன்
கூசாம லவள்மடியி லிருந்துபின்னும்
அரியென்ற வெழுத்தறியான் வல்லான்தன்னை
அம்மையடா கொண்டுபின் முறத்தில்வைத்தாள்
குறியென்ற நகக்குறியால் வயற்றைக்கீறி
குடல்பிடுங்கி மாலையிட்டாள் குமரியப்பா
பிரபலமாய் ரெண்டாக வகுந்துசேர்த்து
பேசரியப் பப்பையதாய்ச் செய்தாள்பாரே.(209)

சேத்ததொரு பம்பையடா யிடப்பையாக
செகசால உலகமெல்லாந் திடுக்கென்றென்ன
காத்ததொரு மூக்கணுங் கயரதாகக்
கரியமா லுந்தியடா பிரமமென்று
யேத்ததொரு அடிக்கொம்பு ருத்ரனப்பா
யெதிர்காண வளையம்நால் யெதிரிகட்டை
பாத்ததை யானறிந்து உனக்குச்சொன்னேன்
பண்பான மலைமகள்தன் கூத்துத்தானே.(210)

தானென்ற கூத்தாலே யெல்லாமாச்சு
தரணியிலே தாய்சமையம் பெரிதுமாச்சு
ஊனென்று மூறவென்று மிவர்கள்கூட்டம்
உத்தபந்தி யிருபத்தி ஒன்றுமாச்சு
தேனென்ற செம்படத்தி வேடம்பூண்டு
தெருவிலே வந்தல்லோ திரிந்தாள்பாரு
மானென்ற நாகமதைத் தரித்தயீசன்
மாசற்ற பிரமமென்று யிருந்தார்பாரே. (211)

பார்க்கவே அவள்பூண்ட வேடந்தானும்
பழிகாரி போலேயவள் திரிந்துபின்னும்
மார்கமதைக் காணுத மூடர்தானும்
மலையனூ ரெல்லையிலே பிறந்தாளென்பார்
ஆர்க்கவே அவதரித்தா ளந்தஊரில்
ஐந்துனாள் போனபின்பு சுருதியானுள்
ஏர்க்கவே பேர்படைத்து அசுரர்தன்னை
யிடரவே பிரமைகொண்டு யிருந்தார்பாரே.(212)

யிருந்தயிட மவனூரை மசானமாக்கி
யேகாந்த ரூபமதைப் படைத்துப்பின்னும்
அருந்தவத்தோ ரமூர்தமது கடையும்போது
அரனுரு மமூர்தமென்று விஷத்தையுண்டார்
பொருந்தவே விஷமுண்ட யீசனும்
பெலியிரந்து வுண்டகூத்து யிதுதானப்பா
வருந்தவே வந்தவகை யெல்லாஞ்சொன்னேன்
வழிகாணு மூடருக்குச் சொலவேண்டாமே. ()

வேண்டாத நஞ்சுண்ட ருத்திரன்தானும்
வேதனுட சிரசறுத்த குருநாதன்றன்
தாண்டவியாள் தனைப்பெற்ற அயோத்திவிட்டு
தக்கனைப்போற் சூரனைத்தான் வதைத்தமார்க்கம்
ஆண்டவனு ராடியதோர் கூத்திலப்பா
அங்கையெனுந் திரிசூலி யானுள்பாரு
வேண்டியே தபோதனர்கள் வந்துபோற்ற
வேதியர்கள் வேதமெல்லா மவளானுளே. (214)

வேதமென்ற மனோன்மணியா ளவரைக்கொண்டு
மேலான ஆரூரில் தவத்தைச்செய்து
பாதமென்ற யிடபாகப் பேருபெற்று
பதிவான காஞ்சியிலே பரனுருக்காய்
பேதமையாய் வாழைப்பந் தலிலேவந்து
பெரியதவஞ் செய்தல்லோ யிருந்தவல்லி
பாதமூர்த்தி பரமனுக்குத் தேவியானாள்
பச்சைவல்லி யென்றவளைப் பகரலாமே. (215)

பகரலா மென்றுசொன்ன குருவேஅய்யா
பரசமைய மாறதனில் நின்றருபி
மணியணியாய் நின்றவல்லி யவளைக்காண
மணியான மணியாட்டம் வந்ததேது
கனியான ராசிபனி ரெண்டுமேது
கதிர்காணு அலகைபல பேர்தானேது
துணியான கந்தையது வந்ததேது
துணிந்துபல பெலிகளது கொடுப்பதேதோ. ()

ஏதென்று கேட்பதற்கு யின்னங்கேளு
யெளிதான யெல்லம்மை யென்பதாரு
வாதென்ற அவள் நீலி காளியாரு
வழிமறித்துப் பூசைகொள்ளும் பகவதியுமாரு
மாதென்று பூமியிலே மல்லாரிகொட்டு
மாரியென்ற வாசலிலே நிற்பதாரு
காதென்று மூக்கென்று மிருப்பதென்ன
களறிசெய்து பூசைபோட்டுச் செய்வதேதோ.

போடுவது யென்னவென்று கேட்கவந்த
புலத்தியனே சொல்லுகிறேன் கேளுகேளு
ஆடுகின்ற மணியாட்ட மம்பரமேயாச்சு
அதைச்சேர்ந்த விபரமின்ன மரையக்கேளு
நாடுகின்ற ராசியடா செய்குறிகளாச்சு
நல்லதுணி கந்தையடா வேதமாச்சு
போடுகின்ற பெலியல்லோ யெருமையாச்சு
போக்கறியார் மூலமென்று புகழுவாரே. (218)

மூலமென்ற திருமூல மல்லகண்டாய்
முக்கண்ணி யுடகூத்து முனிவராட்டுக்
காலமென்று லதிகாலம் பூசைவேணுங்
கன்னியென்ற யெழுவருவே பரசமையமாச்சு
ஆலமுண்ட கண்டரிட மொருத்தியாச்சு
ஆதியவ னிரணியனைக் கொன்றபோது
தாலமென்ற செகந்தனிலே யுதிரபெலிவாங்கத்
தாயார்தன் வாசலிலே நின்றுள்பாரே. (219)

யெதிரான அவதாரந் தேசத்துள்ளே
யெங்களுட தேவியுட னிருந்துபின்னும்
சதிரான கதிர்சாய்ந்த உலகத்துள்ளே
கம்பத்தி னடியில்நின்றுன் கரியமாலும்
சதிரான பெலியுமடா முப்பெலியும்வாங்கிச்
சந்தியிலே மடிந்தவர்க்குச் சாவுமில்லை
அதிரான அடிபட்டுச் செத்தபேரும்
ஆத்துமத்தைக் குறியாத அலகையாமே. (220)

அலகையென்று மானிடரை மிரட்டிப்பின்னும்
ஆக்ரமித்துப் பற்கடித்துப் பெலியும்வாங்கி
பலகையென்ற பலவூரு மயத்துநாளில்
பலசமய மார்க்கமதைப் பார்த்துப்பின்னும்
அலகையென்ற ஆருளை சமையந்தன்னில்
அக்கினியாம் வீரனென யிருக்கவென்றுர்
சலகையென்ற அக்கினியும் படியுமாளுள்
சஞ்சலங்கள் தீர்க்கவல்லோ தாயார்பாரே. (221)

தாயான மூலத்தைச் சொல்லக்கேளு
தனியாலிற் பள்ளிகொண்டான் தாயாராகும்
பேயான அலகையுடன் கூத்துமாகி
பெரியதெய்வ மென்றுமவள் பேருபெற்று
காயான காஞ்சிகா மாட்சியாளுள்
கார்காலந் தன்னிலே மாரியாளுள்
பாயான உலகதனிற் பத்தினியுமாளுள்
பரசமைய மாறுக்கு ளிருந்தாள்காணே. (222)

யிருந்தவிடங் காணுதற்கு அச்சஞ்சொல்லும்
யீறென்று வேதமதி லிருந்தசத்தி
யீருரு சமயமதி லிருந்ததெங்கே
யிருந்தவிட மெந்தனுக்குக் காட்டவேணும்
யிருளிருக்குங் கோலமதைச் சொல்லவேணும்
யின்னதென்று அடியேர்க்கு யியம்பவேணும்
யிருந்தவிதங் காட்டியே சொல்லவேண்டா
மியல்பான குருசாமி யிறைஞ்சினேனே. (223)

யிறைஞ்சவே யின்னமொன்று சொல்லக்கேளும்
யியல்பான சட்டைமுனி பேரைச்சொல்லும்
மறைஞ்சகனி யின்னதென்று வகுத்துச்சொல்லும்
மாரியென்று மரபுகளில் வந்ததென்ன
அரன்செயலோ யல்லாது வேறுமுண்டோ
அம்பிகைதன் னருளான விபரமென்ன
கரஞ்சபின்பு யிரக்கமென்ன காண்பதென்ன
காசினியோர் தன்பகட்டைக் காட்டுவீரே. (224)

காட்டாத பொருள்களெல்லாங் காட்டச்சொன்ன
கருத்துள்ள புலத்தியனே கூறக்கேளு
மூட்டாத கம்பளி யதனைப்போத்தி
முதல்வனாய் நின்றவனே தெய்வமாச்சு
மாட்டாத நவசித்தர் வைத்தபேரு
மாரியென்ற வசூரியது நானேயென்றாள்
கூட்டாத அக்கினியே சட்டைமுனியாச்சு
கூடிநின்ற கைப்பிடியே பிரமங்காணே. (225)

பிரமமென்ற கபாலமடா ஆத்தாள்பீடம்
பிரசமைய மாறுக்கும ஒருத்திதெய்வம்
கருமமென்ற பூமியிலே மாரியானாள்
காமாட்சி யானவளு மவளேயானாள்
வருமமென்ற யெல்லம்மை யவளுமாச்சு
வழிமறித்த பகவதியு மவளுமாச்சு
தருமமென்ற பச்சையுமே அவளுமப்பா
தரணியிலே யீராறு சமையங்காணே. (226)

காணென்று யெந்தனுடன் சொல்லவந்த
காரணசற் குருவேயான் கருதக்கேளீர்
ஊனென்றுங் கங்கைநதி யாடவென்று
உலகிலுள்ள மானிடர்கள் போவதேது
மானென்ற விழியான கன்னிதானும்
மதத்தாலே நீர்தனிலே முழுக்குதேது
தேனென்ற மொழியுடையா ளாத்தாள்தானும்
தெளிவான தெளிவெடுத்துக் காட்டிடரே. (227)

காட்டவே யின்னமொன்று கருதக்கேளீர்
கள்ளநதி யேழுமங்கே பிரவேசித்து
நாட்டினில்நா தன்சடைமேற் கெங்கையாரு
நாட்டிலுள்ள மானிடர்க்கு மோட்சமேது
பூட்டாகப் புதுமைகளைக் காட்டவந்தீர்
புவியிலே அய்யனும் ருத்திரனும்
காட்டவே யிதுபுதுமை காட்டவேணும்
கருத்துள்ள சீடாவர் மகிழத்தானே. (228)

தானாக நின்றவன்றன் சிரசுமீதில்
தனியான கெங்கையுடன் கதிருஞ்சாத்தி
ஊனான உடலுக்குள் ளிருந்தாரீசன்
உண்மையா யிதனுடைய உணவுகேளு
மானாக யிடப்பாகம் வைத்தரய்யா
மானிலத்து மானிடர்க்கு மதுவேயாச்சு
வானான யிவனேவல் கேட்டவேகம்
வழியான சத்திதந்தி சாற்றக்கேளே. (229)

சாற்றவே வினைதீர ஸ்தானஞ்செய்து
தாரணியில் மூடருக்குக் கங்கைநதியப்பா
ஆற்றவே யவளிடத்தில் வந்ததோசம்
அப்புரத்தே போகாமல் முழுகவந்தாள்
தூற்றவே கெற்பமென்ற தோசந்தீரச்
சுந்தரியாள் நீருடித் தூரநின்றாள்
பார்த்தபேர் பயப்பட்டுத் தூரநிற்கப்
பைங்கிளியா ளதுகண்டு பதுங்கினாளே. (230)

பதுங்காத மலர்தன்னைச் சொல்லக்கேளீர்
பரவைமரம் பிர்மமடா பார்த்துக்கொள்ளு
ஒதுங்காத மலருருத்ரன் அனந்தனுகும்
ஒத்துப்பார் பிரபஞ்ச வாழ்க்கைதன்னை
பதுங்காதே ஞானவழி யேறுயேறு
பஞ்மா பாதகரி னுறவுதள்ளு
ததுங்காதே சத்தநதி பிறப்பு யெந்தன்
தன்பொதிகை மலையல்லால் வேறுமுண்டோ.()

வேடா யென்மலையிற் பிறந்ததீர்த்தம்
வெளிகண்டுயேழுமங்கே பிரவேசித்து
காரடா குருபதத்தைப் பணிரெண்டாண்டு
கருணையுட னுந்தனுக்குக் காட்டுவார்கள்
பாரடா செகசாலக் கூத்தைமைந்தா
பழிபாவம் வாராமற் பாருபாரு
ஆரடா யெனைப்போலே சொல்லப்போறார்
ஆச்சரிய மிந்தநூல் முற்றும்பாரே. (232)

யெந்தனுட னூல்பார்த்து யிருந்தபின்பு
யெளிதாக நூல்தோறும் பார்க்கவேணும்
மைந்தனே யென்மகனே சொல்லக்கேளு
மச்சமுனி சொற்படிக்கு நடக்கவேணும்
கந்தனு ரெந்தனுக்குச் சொன்னவார்த்தை
காண்பதென்ன காணுமந்தப் பருபதந்தான்
பந்தான மாதர்கள் தன்னைச்சேர்ந்தாள்
பழிபாவ மெத்தவடா பாருபாரே. (233)

பாரிலே நடப்புபல விதங்களாகும்
பழிகாரப் படுகுழியிற் றள்ளுவார்கள்
ஆரிலே நீராடப் போறேனென்பான்
அவர்கள் செய்யுங் கருமங்க ளறியமாட்டான்
பேரிலே பிரபலமா யிருப்பாரப்பா
பெரும்பாவஞ் செய்வார்கள் பேருள்ளோர்கள்
காரிலே மூளைத்தவிதை தன்னைக்காணார்
கசடர்கள்தன் னுறவாலே கலங்குவாரே. (234)

கலங்காமற் பூசாரி பேணைக்கேளு
கருத்துள்ள மானிடரி லொருவரப்பா
மலங்காமல் மாரியைத்தான் மனதில்வைத்தான்
மகத்தான பூசாரி யென்பாரப்பா
தலங்காமற் தேவரிசி சித்தர்போற்றும்
தாய்பதத்தி லனுதினமுங் காக்கவேணும்
அலங்காத தீபமதை யறியவேணும்
அப்பவல்லோ பூசாரி யென்னலாமே. (235)

எண்ணுமல் மானிடர்க ளுலகுதன்னில்
எண்ணியெண்ணி எழிதாகப் பூசைசெய்வார்
கண்ணுன கங்காளி வீரபத்திரன்;
கருத்துள்ள செயமுனிவர் தன்னைகாணர்
கையுடுக்கு விபரமதைக் காணரப்பா
கன்னியிலே நிகர்சொல்லத் திறமுங்காணர்
மண்ணுன மணிச்சிலம்பின் பேரைக்காணன்
மந்தையிலே மாடுமேய்க்கு மனிதர்தானே.(236)

மார்க்கமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
மண்டபத்தில் தேவதைகள் வெவ்வேறப்பா
ஆர்க்குமே தெரியாது யிந்தக்கேள்வி
அவனிதனில் வீரனெல்லாந் துஷ்டனுகும்
கார்க்கவே வைத்ததொரு அட்டகாளி
காசினியிற் துஷ்ட்டர்களை யடக்கிக்கொண்டு
பார்க்கவே பிரபலமா யிருந்துபின்னும்
பதிகார்க்க வேணுமென்று யிருந்தவாரே.(237)

யிருந்தாக்கா லொன்றுமில்லை யேகவெளியப்பா
யிருகையுஞ் சிவமொன்று சத்தியொன்று
மருந்தான தேகமடா மாயக்கூத்து
மயக்கத்தால் கோடிசன மிலந்தாரப்பா
அருந்தாத கனியதுவே யிந்தக்காயம்
அம்பலத்தான் கூத்தடா அறிந்துபாரு
பொருந்தாத விடம்போலே பொய்களவு நீக்கி
பொல்லாப்பு ஒருநாளுஞ் செய்யவேண்டாம். ()

செய்வினையே பிறப்புமாந் தெளிந்துபாரு
செய்கால ருத்திரனே புண்யமாச்சு
கைவினையாய்ச் செய்ததெல்லாங் கருமமாகும்
காயினியில் மாயவனே கர்த்தனாகும்
ஐவருமே பலவிதமா யிருந்தமார்க்கம்
அம்பிகையாள் தன்னருளால் வந்தபாவை
மைவிளியாள் தன்மாய்கை யற்றுப்பின்னும்
மகாதேவர் தன்னருளை வணங்குவீரே. (239)

வணங்காத பேர்கள்தனை வணங்கவேண்டாம்
வணங்கினா லின்னாலே வணங்கவேணும்
யிணங்காம லொருவனுக்குச் சொல்லவேண்டாம்
யிப்புவியிற் சிறுமைந்த னுறவுதள்ளு
அனங்கனென்ற மாரனுட மாய்கைதள்ளு
அரன்பாத மாயிபதம் பணிந்துபோற்று
யிணங்கவே யின்னமொன்று சொல்லக்கேளு
யிதையறிந்து நடந்தவனே ஞானிதானே (240)

ஞானியென்று லோகத்தில் மெத்தவுண்டு
நல்லிணக்க மில்லாதான் ஞானியல்ல
காணிகொண்டு கோடிதந்து திரியவேணடாம்
காசினியில் மெத்தவடா கண்டுபாரு
தானியத்தில் வித்தாக யிருந்தயீசன்
தனையறிந்து மார்க்கமதைக் காணுகாணு
பேணியே ஒருவருடன் பேசவேண்டாம்
பேச்சாலே ஒன்றுமில்லை பிழைக்கத்தானே.(241)

பிழைப்பதற்கு வேணுமென்று சொல்லவந்த
பெருந்தமிழில் வல்லவரே சொல்லக்கேளீர்
அழைப்பான அஞ்செழுத்துப் பிறந்ததெங்கே
அன்பத்தோரட்சரமும் பிறந்ததெங்கே
மழைப்பதற்கு மந்திரந்தான் பிறந்ததெங்கே
மாசில்லான் தன்கையிலே மழுவதெங்கே
வழைப்பதற்கு விந்துவது வந்ததெங்கே
வழியாக விபரமாய் வழுத்திடீரே, (242)

விபரமினிக் கேட்கவந்த பிள்ளாய்கேளு
விதமான அஞ்செழுத்து விந்துவாச்சு
தபரமே தத்துவந்தான் தொண்ணூற்றாறும்
தவஞானி கண்டதடா அகாரத்துள்ளே
பவரமினிச் செய்யாமற் குருவைக்காரு
பதிவான பிரணவத்தில் பின்புகாட்டு
மகரமினி மீனமதா யிருந்தமார்க்கம்
மகாதேவ ரெழுத்தாலே மழுவைத்தாரே.(243)

வாமியிவள் மார்க்கமிது அன்பத்தொன்றும்
வரையேழுங் கடந்தபே ரின்பமப்பா
காமியிவள் வெகுகாமி கன்னிகன்னி
காமனுக்குத் தாயான அன்பத்தொன்று
ஆமிவளை யறிந்தாக்கா லெல்லாங்காணும்
அவளுடைய பிரதமையே யெல்லாமச்சு
தாமிவளைப் பூசைபண்ண யெல்லாங்காணும்
தாயைவிட்டாற் பிரபஞ்ச மில்லைகாணே. (244)

இல்லாம விருப்பதற்கு யியல்புகேளு
இயல்பான பூசையடா சிதம்பரமேயாச்சு
சொல்லாமற் சிவபூசை செய்யவேணும்
சோதித்துச் சிவனடியை வணங்கவேணும்
நில்லாமல் நெடுமூச்சை யடக்கிப்பாரு
நிலைக்குமடா தவமுனக்கு நேர்ந்துபாரு
கல்லாமற் கற்பவற்கு யிந்தஞானம்
கருதவே தோணுமடா கண்டுகொள்ளே. (245)

கண்டுகொள்ளு யென்றுசொன்ன புலத்தியாகேள்
கமலத்தில் பிரமன்வந்த விதங்கள்சொல்வார்
காணாத காட்சியடா பரமஞானம்
கலந்தாக்கா லப்போது தெளிவுகாணும்
பூணாத பொன்னணிந்து வருவாள்பாரு
பொய்மாய்கை யென்றதெல்லாம் பொய்யதாமே
வீணான மாய்கையினில் விழாமல்தானே
விரும்புகின்ற சூட்சமதே மாய்கைதானே.(246)

மாய்கையென்ற சூட்சத்தை மருவிப்பாரு
மனையாட்டி யாசைதனை மறந்துபாரு
ஆசையா லாகாமிய மொடுங்கவேணும்
அறுமறையி லுள்ளபடி உரைத்தேனப்பா
பாசையுண்ட யீயதுபோற் பறக்கவேண்டாம்
பஞ்சமா பாதகத்தை மறந்துநீயும்
யீசையென்ற அறமதுவே தத்தளிக்கப்பண்ணி
யிருந்தயிடங் காணியடா யியம்புவேனே. (247)

யியம்புவே னென்றுசொன்ன குருவேஅய்யா
யெளியேனு னேசிறுவ னேதுங்காணேன்
பாம்புமேல் பள்ளிக்கொண்டான் றனக்குயெட்டுப்
பாரியென்று சொன்னவகை பகரவேணும்
காம்பணைய தோளார்தன் மாய்கையெல்லாம்
கண்ணனுட மாய்கையது யென்றதேது
சாம்பசிவ நிரந்தரமாய் நின்றநிலைசொல்லும்
சர்ப்பத்தில் விஷம்வந்த வாசொல்வீரே. (248)

விசமென்ற மாய்கையது வெண்ணதாச்சு
விமலனுட திருக்கூத்து விளங்கப்போமோ
கசமென்ற குழிதனிலே விழுந்தமாந்தர்
கருதுவார் பலவிதமாய்க் கண்டுபாரு
வசயென்ற ஞானத்தைக் கண்டபேர்கள்
வழிவசத்தைக் காண்பார்கள் மற்றோர்காணார்
மசகமென்ற கொசுப்போலே மயங்கவேண்டாம்
மதியிரவி யற்றபிர்ம யோகம்பாரே. (249)

யோகமென்றால் சிவயோக முண்மையாச்சு
ஒத்துநின்ற கிரிகையடா யோகவாழ்க்கை
பாகமென்று விடப்பாகம் பெற்றாளாத்தாள்
பதியறிந்து நின்றவனே சிவயோகியப்பா
ஆகமபு ராணமெல்லா மவனேயாச்சு
ஆதியாய் நின்றசத்தி யவளுங்கூட
ஆகமத்தைப் பேசிவைத்தா ரீசன்தானும்
அப்படியே உலகமது நடந்தவாரே. (250)

நட்டந்தவா ரென்றுசொன்ன நாதாகேளீர்
நானிலத்தில் விருதுபதி னெட்டுஞ்சொல்லும்
கடந்தோர்சொற் கவிசிதறு மெழுத்துஞ்சொல்லும்
கைலாச மேருவென்ற வரையுஞ்சொல்லும்
படர்ந்தகொடி கயருக்கும் பம்பைக்குந்தான்
படியான டப்பைக்கு மெழுத்துச்சொல்லும்
வடம்புனரு முடலுக்குங் கிடுகிட்டிக்கும்
வளமைபெற்ற சவுரிக்கு மெழுத்துமுண்டோ.(251)

முதலான ஆலயமாங் கோவிலுக்கு
முன்னின்ற பீடத்தி னெழுத்தைச்சொல்லும்
அதிலான பாவையொடு பீடத்துக்கும்
அம்மனுக்குந் தீபக்கா லெழுத்துஞ்சொல்லும்
மதிலான பிரகாச மட்டதிக்கும்
மறையோதும் பூரிக்கு மெழுத்துச்சொல்லும்
காதலாங் கன்னியர்க்கு மோகத்தாலே
கைபிடிக்கு மெழுத்ததனைக் காட்டவேணும்.(252)

மாட்டினதோர் வளையமடா அகாரமாச்சு
மருவிநின்ற குஞ்சமடா பிஞ்சுமாச்சு
காட்டினதோர் விருதெழுத்து யிகாரமாச்சு
கடுத்துநின்ற சலவிருது அதின்பிஞ்சுமாச்சு
ஆட்டியதோர் மணியல்லோ உகாரமாச்சு
அதில்நாவு டன்கூடப்பிஞ் செழுத்துமாச்சு
கூட்டியதோ ரெழுத்தாலே மணிகள்சேர்ந்துக்
குறமகளை மாலையிட்டார் முருகன்தானே. (253)

தானென்ற குறவருக்கு மணிகள்சேர்த்துத்
தனிக்காட்டில் குடியிருக்க வைத்தாளாத்தாள்
ஊனென்ற உடலெழுத்துத் தீபக்காலாச்சு
உத்துநின்ற பம்பையடா ரீங்காரமாச்சு
பானென்ற வளையமடா சங்றீங்காச்சு
பதிவான குச்சியடா ஓங்காரமாச்சு
ஆனென்ற ஆணுவத்தைப் படைத்தபேர்க்கு
அடக்கமல்லோ ரகசியங்க ளானவாரே. (254)

வாருகொண்டு யிருக்கியல்லோ மேளந்தன்னை
வையகங்கள் தானதிர முழக்கமிட்டு
பேருகொண்ட சேகண்டி யடிப்பதேது
பெலமான நாதாக்கள் முழக்கஞ்சொல்லும்
ஆருகொண்டு அம்பலத்தி லாடும்போது
அவருடைய தன்காலில் சலங்கையேது
ஊருகொண்டு சொல்லாமல் வென்றுசோம
னுனற்சிலம்புக்கோர்வையுட யெழுத்துச்சொல்லே.

வீரான வீராப்பு யேழுமாச்சு
விதமான அகாரமடா அதுவேயாச்சு
பாரான சேகண்டி இகாரமாச்சு
பறையெழுத்தும் பானுமங்கே கூடிநின்றார்
வாரான யெழுத்தல்லோ யெட்டுமாச்சு
வடமென்ற நாகமடா கயரதாச்சு
கூரான சலங்கையடா ஐந்துமூன்றும்
கூடிநின்ற யெழுத்தாலே யெல்லாமாச்சே. (256)

ஆச்சடா அகாரமுத லைம்பத்தொன்றும்
அறிவான மூலமடா ஐந்துஐந்து
பேச்சடா பிரணவமு மைந்துமாச்சு
பேசரிய மந்திரமு மதுவேயாச்சு
காச்சடா பாலதுக்கு மோர்தெளித்தாப்போலக்
கண்ணுக்குள் மணியான கருத்தைப்பாரு
நீச்சடா நிலைகாணுக் குருடருக்கு
நிலவரத்தைக் கண்டவர்கள் நிசங்காட்டாரே.()

நிசமான பூரணமே தெய்வமென்றும்
நிலையான பஞ்சகர்த்தாள் நீதியாகும்
கெசமான கெசமல்லோ சமுசாரவாழ்க்கை [டாம்
கிரிகையோர்க் கிதுவேணும் கிலேசம்வேண்
பசமான பாசமது பற்றிற்றானல்
பரகெதிக்கு வழியில்லை பாருபாரு
வசமான மாயையதைத் தள்ளவேணும்
வழிபாடு கண்டுமெள்ளத் தேறுதேறே. (258)

தேறுமென்று யெந்தனக்குச் சொல்லிவந்த
தெளிவுதா னின்னதென்று காட்டவேணும்
காறுமென்று சொல்லாமல் கருத்தைச்சொல்லும்
கரைகாணப் பேரின்பங் கண்டநாதா
கூறுமென்று நானடியேன் கேட்கவந்தேன் [லும்
குருவென்றும் சீடரென்ற யெழுத்தைச்சொல்
மாறுமென்ற யெழுத்ததிலே உண்டோசொல்லும்
மாதவத்தில் சத்திநின்ற வகைசொல்வீரே. (259)

வகையான வகையின்னம் வணங்கக்கேளீர்
வயிரவனர் காவலென்ற மார்க்கஞ்சொல்லும்
திகையறிந்து தோத்திரங்கள் செய்வதேது
திரைத்தனஞ் செய்கின்ற யெழுத்தைச்சொல்லும்
பகையான பகையறிந்த யெழுத்துஞ்சொல்லும்
பழிகண்ட வழியாடு யெனக்குச்சொல்லும்
தகையான தகையறிந்த எழுத்தைச்சொல்லும்
தனித்தனியே வெளியெங்கே காட்டுவீரே. (260)

காட்டுமென்று யெந்தனைக் கேட்கவந்த
கருத்துள்ள சுந்தரமே கருதிக்கேளு
பூட்டுப்போ லிருந்துலக வாழ்க்கையப்பா
பொய்யென்று யெண்ணியே தள்ளவேணும்
மாட்டுமே லேறுமந்த யீசன்றானும்
மதிரவியாய் நின்றதுவுங் கண்டுநீயும்
நாட்டிவைத்த மரந்தனக்குத் தாயைப்போலே
நானிலத்தோர் தங்களுக்கு யீசனுச்சே. (261)

ஈசான்ய முதலாக யெட்டுத்திக்கும்
இருப்பவனே ஒருவனப்பா யியல்பாய்க்கேளு
மாசான மோரெழுத்தில் முடிந்ததப்பா
மனோன்மணியா ளெந்தனக்கு மகிழ்ந்தவார்த்தை
ஆசானும் சொல்வதல்லால் மற்றோர்சொல்லார்
அவனிதனில் கல்விகளு மதிகமுண்டு
கூசாம லொருவருக்குஞ் சொல்லவேண்டாம்
கூருகெட்டார் தன்னுறவு தள்ளுதள்ளே. (262)

கண்ணுக்கு ளொருவனின்ற நிலையைக்காட்டும்
கருவிலே துன்பமென்ற கருவைக்காட்டும்
மண்ணுக்கு ளொருவனுமாய் நின்றனுதன்
மதிகெட்டு மதியான வாருஞ்சொல்லும்
விண்ணுக்கு ளொருவனுமா யிருந்தமூர்த்தி
விதிதனக்கும் மதிதனக்கும் விபரங்காட்டும்
பண்ணுதமி ழாராய்ந்த குருவேசாமி
பரகெதிக்கு ஒருவனல்லால் வேறுமுண்டோ.(263)

பரகெதியைக் காண்பதற்கு விபரங்கேளு
பாரிலுள்ள தேவதையைப் பூசைபண்ணி
பரகெதிக்கு ஆளாக யிருந்தாயானல்
பட்சம்வைத்து யென்குருவும் பகர்வாரப்பா
பரகெதிக்கு வழிகாட்டுந் தெய்வங்கேளு
பட்சம்வைத்து வீரபத்திரன் வடுகனோடு
பரகெதிக்கு யிவர்கள்முத லந்துபேரும்
பாரதனிற் குண்டலியும் பகர்ந்திட்டேனே. (264)

திட்டமாய்ச் சொல்லுகிறேன் யின்னங்கேளு
திரிகால பூசையடா தேவபூசை
வட்டமாய் வளையமிட்டு அறுகோணமிட்டு
வாசலிலே காவல்வைத்து வணங்கவேணும்
அட்டமா சித்தோடு அனேகம்வித்தை
அவள்காட்டி வழிகூட்டி ஆட்டங்கொள்வாள்
பட்டமரம் பால்சொரிய வைத்தாள்கன்னி
பழிகாரி தனைப்பணிந்து பாதங்காணே. (265)

பாதமது பணிவதற்கு யின்னங்கேளு
பரிபாசை தனைமறந்து பணியவேணும்
வேதமது காணுதா ருறவுதள்ளு
வெள்ளாட்டிப் பயல்களை நீ சேர்க்கவேண்டாம்
தாதமது வல்லவடா தாயைப்போற்று
தையலர்க ளுறவாமோ தரணிமீது
மாதமதி லேயொருநாள் மைந்தாகேளு
மாசில்லா மணியாள்தன் னுள்ளமாமே. (266)

தாமெனவும் போமெனவும் நின்றனுதன்
　　தரணியீ ரேழுக்கு மொருவனுனேன்
தாமெனவும் நின்றசதா சிவனுமானேன்
　　சரமெல்லாம் நிறைந்துநின்ற பரமசோதி
பூமெனவு மிவ்வாரி லொருவனுனேன்
　　புண்ணியனே யென்னுளுடை புகழவேணும்
நாமெனவு மஞ்செழுத்தைப் பணியவேணும்
　　நல்லகெதி யடைவதற்குப் பாதையாமே. (267)

பாதையறிந் தேநடந்தால் பலனுங்கிட்டும்
　　பழிபாத மேதுமில்லை பரனைக்கண்டால்
கோதையரைச் சேர்ந்தாக்கா லேதுமில்லை
　　கொடும்பாவங் கிட்டுமடா கூர்ந்துபாரு
சதையறிந்த ஊனதுபோல் தயங்கவேண்டாம்
　　சமுசார மாயமெல்லாந் தள்ளவேணும்
கதையறிந்து மலகைபோற் கலங்கவேண்டாம்
　　காசினியிற் பொருள்தேடிப் புதைத்திடாதே.(268)

காசிமுதல் கன்னிவரை தெய்வமுண்டு
　　கலந்துநின்ற வகையடா கண்டுபாரு
தாசிமக னொருவனல்லோ தாயைக்காண்பான்
　　தற்கமிட்ட சுந்தரமே சொல்லக்கேளு
ஆசுகவி பாடுவோர்க்கு மோட்சமில்லை
　　அரிஅரா வென்பவர்க்கு மோட்சமுண்டு
வாசிதனில் ஒளிந்தோர்க்குச் சாயுட்சியங்காட்டும்
　　வழிபாதை யிதுவல்லோ வணங்குவாயே.(269)

வணங்கென்று சொல்லவந்த குருவே அய்யா
　　வழிகண்ட தேவதைக்கு உயிருண்டோசொல்
யெணங்கவே யெந்திரங்க ளுண்டோசொல்லும்
　　யேகாட்சர பூரணமு மெழுத்துஞ்சொல்லும்
அணங்கனைப்போ லலங்கரித்துத் திரிவதேது
　　அன்னைபிதா யிருவரென்ற மார்க்கமேது
மனங்கண்ட தெய்வமதை மறந்துபின்னும்
　　மாகினுக் கண்டதுஞ்சொல் வணங்குவேனே (270)

வணங்குதற்கு விபரமினிச் சொல்லவேணும்
மைந்தனே சொல்லுகிறேன் மருவிப்பாரு
அணங்கனுட தனுப்போலே கீறிக்கொண்டு
ஆதித்தன் வளையமொன்று அதிலேகீறி
அணங்கனென்ற வெழுத்திலே யிட்டுப்பின்னும்
அப்பனே சூலமிட்டு ரீங்காரமிட்டு
பணங்காசு போகுதென்று பார்க்கவேண்டாம்
பாலோடு பலகாரம் வைத்துப்போற்றே. (271)

போற்றியபின் வீரனங்கே நிர்த்தஞ்செய்வான்
பொல்லாத வினைகளெல்லாந் தீர்ந்துபோகும்
மாற்றியே அறுகோண மிட்டுநீயும்
மைந்தனே வளையமிட்டுச் சூலங்கட்டி
நாற்றிசைகொண் டாடஆ றெழுத்தைப்போட்டு
நால்வாச லிட்டல்லோ நடுவேகேளு
தாட்டிமையாய் ஐமூன்று யெழுத்தைக்கூட்டி
தருவென்ற மாரிதனை நடுவேவையே. (272)

நடுவிருந்த மாரிதனைப் பூசைபண்ணி
நாட்டில்சிவ காருண்ய னென்றுசொல்லி
படுபாவி யானுக்கால் பழிப்பானப்பா
பரமசிவ னடியார்கள் பழிக்கமாட்டார்
கடுகடுத்து முகம்வெறுத்துக் காட்டுந்தெய்வங்
காளியடா அட்டசத்தி கண்டுபாரு
வெடுவெடுத்த ரூபமடா வேதனுக்கும்
வேதாந்த சிரோன்மணியா ளாத்தாள்கூத்தே.(273)

ஆத்தாளைப் பூசைபண்ண அறிவுவேணும்
அறிவில்லா மூடருக்கு அதிஷ்டமில்லை
பாத்தாளே முப்புரத்தைத் தீயதாக
பழிகாரி கண்ணிலேதான் படவும்வேண்டாம்
வேத்தாளைப் போலேயவள் வருவாள்பாரு
வேடங்கள் மாறியல்லோ மாரியானுள்
மாத்தாளைக் கண்டவர்கள் மதிக்கமாட்டார்
மகராசி வடிவெல்லாம் மாயக்கூத்தே. (274)

கூத்தான ஆத்தாளைப் பூசைபண்ண
குருவென்றும் சீடனென்று மிருக்கவேணும்
காத்தான அலகையடா லோகவாழ்க்கை
கண்டுபார் பிரபஞ்சம் வீணதாச்சு
வேதாந்தங் கண்டாக்கால் வேதஞ்சொல்லும்
வேதாந்த சிரோன்மணியாய் விளங்கவேணும்
பாத்தாலோ சிறுபிள்ளை பிராயம்பத்து
பக்குவத்தை யின்னதென்று பகரொண்ணாதே.()

ஒன்றான யீஸ்பரியைத் தியானம்பண்ணி
ஓதுவான் காராளன் உகந்துபாரு
கண்ணான கண்ணிமையி லிருந்தகன்னி
காட்டுவாள் கன்னிசொல்லக் கண்டுபாரு
புண்ணான பூவையரைச் சேந்தாயானால்
பூருவத்துத் தெய்வமெல்லாம் பொய்யாய்ப்போச்சு
யென்னாளு மிடரில்லை யுனக்குமைந்தா
யெதிரியுட யேவல்பில்லி யெகிரிப்போச்சு.(276)

போச்சுதடா மாய்கையென்ற தெல்லாம்போச்சு
பொன்மாரி யுந்தனுக்கு நிமித்தஞ்செய்வாள்
வாச்சுதடா பேரின்ப முந்தனக்கு
வழிபாதை கண்டாக்கா லெல்லாங்காணும்
ஆச்சுதடா யிதைப்பழித்தா லவமாய்ப்போவாய்
அனேககர்மங் கிட்டுமடா அழிந்துபோவாய்
காச்சுதடா பேரின்ப முந்தனக்குக்
கலந்தேற வழிசொல்வேன் காணுகாணே.(277)

காணவே யின்னமொன்று கருதக்கேளு
கன்னியரைப் பூசிக்க மந்திரங்கேள்
பூணவே ஆபரண மெல்லாம்பூட்டி
பூவையற்குக் கெந்தபரி மளங்கள்சாத்தி
நாணவே ஆணுவங்க ளெல்லாம்போக்கி
நங்மங்சிங் வங்யங்ஜயுங் கிலியுஞ்சவ்வும்
றீங்றீங்றங்றங் மாதரிவீரி வயிரவிசண்டி சாமுண்டி
கெவுரிவுச்சாடனி உச்சாடுஉச்சாடுவென லச்சமோதே.

லெச்சமடா பட்சம்வைத்து ஓதுநீயும்
நிலவரமாய் ரேசகத்தில் நில்லுநில்லு
அச்சரமாய் ஐஸ்வரியங் கொடுத்துப்பின்பு
அம்பலத்தான் தெரிசனமுங் காட்டுவார்பார்
பச்சம்வைத்து உன்னிடத்தி லிருப்பாளாத்தாள்
பழிகாரி தனைக்கண்டால் பாவம்போச்சு
நிச்சயமா யுந்தனக்குச் சொல்லிவிட்டேன்
நிலவரத்தைக் கண்டறிநீ நிசஞ்சொன்னேனே.

நிசமான வென்குருவே சாமிநாதா
நீறணிந்தோ னட்சரத்தி லென்ன ஆகும்
பசமான பாசமதை நீக்குமோசொல்
பாசவினை கொடுமையெல்லாந் தீர்க்குமோசொல்
வசமான ஞானவெளி தங்குமோசொல்
வழிபாதை தீர்க்கமதைக் காட்டுமோசொல்
கசமான மறலிதனை யகற்றுமோசொல்
கசடருட வுறவுவிட்டுப் பணிந்தேன்சீடன். (280)

பணிந்தவொரு சீடனையே பார்த்துப்பின்பு
பாலகனே யென்மகனே யென்றுசொல்லி
கனிந்தவொரு கண்மலரி லொற்றிப்பின்பு
கனியான நற்கனியே சுந்தரமே அய்யா
அணிந்தவொரு ஐந்தெழுத்தா லெல்லாந்தீரும்
ஆத்மாவி லைந்தெழுத்துங் கலந்துநிற்கும்
அணிந்தவொரு நீறுமடா ஐந்தெழுத்துமாச்சு
அம்பலத்தி லாடினது மஞ்சுமாச்சே. (281)

ஆச்சடா ஆறெழுத்தால் வினைகள்தீரும்
அம்பலவ ருந்தனுக்கு அருள்கொடுப்பார்
பேச்சடா பேய்த்தனமா யிருக்கவேண்டாம் [டாய்
பெண்ணரவங் கடித்ததென்றால் பிழைக்கமாட்
காச்சடா தியானத்தா லிருவரையுங்காச்சு
கண்மூடித் திறக்குமுன்னே காட்சிகாணும்
வாச்சுதடா உந்தனுக்குப் பேரின்பமப்பா
வழிகாட்டி உந்தனுக்கு வழிசொன்னேனே. (282)

வழிகாட்டு மென்குருவே அய்யாஅய்யா
வழக்குண்டு மெந்தனக்கு மூந்தனக்கும்
பழிகாட்டும் பெண்ணுளைச் சேர்ந்தபின்பு
பரகெதிக்கு வழியில்லை யென்றதேது
சழிகாட்டுஞ் சதாசிவனு ராட்டமென்றும்
சாற்றினீர் முன்புமே சாற்றப்போமோ
அழிகாட்டுந் தடக்கையான் யெம்பிரானும்
ஆத்தாளை யிடபாகம் வைத்ததேதோ. (283)

யேதென்று யெந்தனைக் கேட்கவந்த
யென்மகனே சுந்தரமே சொல்லக்கேளு
போதென்ற பெண்ணுலே பொறிகலங்கிப்போகும்
பொக்கிஷத்தின் மேலாசை யதிகமாகும்
வாதொன்று மில்லையடா வழிகாணமாட்டாய்
வழக்குவேண் டாமினிச் சொன்னேனையா
மாதென்ற பொன்ஞலே மாண்டுபோன
மானிடர்கள் மெத்தவுண்டு பருவிப்பாரே. (284)

மருவாம லிருந்தாக்கால் மனம்போங்காதே
மானிலத்தில் மானிடர்கள் பெருக்கமேது
பெருகாமற் போனுக்கா லுலகமேது
பெம்மானை யார்கண்டு தொழவேபோருர்
சருகாம லிருந்தாக்கால் கால்வழியேபொங்கி
சஞ்சலங்க ளுண்டாக்கும் சாமிநாதா
அருகாகி யணையாம லறிவுகாட்டும்
ஆத்தாளைப் பூசைசெய்ய அருள்செய்வீரே.(285)

அருகாமல் விந்துநிலை யுணரவேணும்
அவனியோர் செய்கரும மறக்கவேணும்
பருவமாய்ப் பெண்ணுசை மறக்கவேணும்
பக்குவத்தை யின்னதென்று அறியவேணும்
அருபமாய் நின்றெழுத்தைக் காணவேணும்
ஆத்தாளைப் பூசைபண்ண அறிவுவேணும்
பருவமாய்ப் பூசையிலே மனதைவைத்துப்
பராபரையை யனுதினமும் போற்றுவாயே.(286)

போற்றுமற் போற்றுதற்கு விபரஞ்சொல்லும்
பொறியைந்தும் புலனைந்து மெழுத்துங்காட்டும்
ஆத்தாளைக் காண்பதற்கு விபரஞ்சொல்லும்
அம்பலவர் பதம்போற்ற விபரஞ்சொல்லும்
பார்த்தாலே சிறுபிள்ளை யென்பதுவுஞ்சொல்லும்
பரகெதிக்குப் பரனிருந்த விபரஞ்செல்லும்
மாத்தாலே லோகமெங்கு மதியாக்கன்னி
மாமறையுங் காணுத விபரஞ்சொல்வீரே. (287)

விபரமென்ன பூருவத்திற் சொன்னேனப்பா
விளங்கவே முக்காண்டங் கொங்கணவர்சொன்னார்
கபரமென்ன ராசாக்க ளைவருக்கும்
காட்டினார் வேதமுனி கண்டுபாரு
கபரமென்ன கரகமென்ன கோடாகோடி
காட்டினார் நூல்தோறுங் கண்டுபாரு
விபரமென்ன பூரணத்தை ஒட்டினுக்கால்
வேதாந்தத் திறவுகோ லிதுக்குள்ளாச்சே.(288)

ஆச்சென்று யெந்தனுக்குச் சொல்லவந்த
அய்யனே யென்குருவே அன்பாய்க்கேளு
மூச்சென்ற யிடமறிந்தா லெல்லாங்காணும்
மூலத்தில் நின்றசிவ மெல்லாந்தோணும்
பேச்சென்று மெண்ணும விருந்தபேர்க்குப்
பேருலகில் ஞானமது தங்கும்பாரு
காச்சியதோர் கனியறிந்த பட்சிபோலே
கலந்தேற வழிகாணுங் கண்டுபாரே. (289)

பார்க்கவே முனிவரவர் பாடும்நூல்கள்
பலவிதமாய்ப் பாடியல்லே பாழாய்ப்போச்சு
பார்க்கவே வலவிதங்க ளாகப்பாடிப்
பண்டிதர்க்குக் கைகுறிப்புக் காட்டினார்பார்
பார்க்கவே நூல்காட்டிப் பகர்ந்தாப்போலப்
பாடவில்லை யென்றுசொல்லப் பழித்தார்மாண்பர்
பாாக்கவே யென்னூலைப் பார்க்கவேணும்
பரியாச மென்றுசொன்னல் பாழாய்ப்போச்சே. ()

போச்சென்று சொல்லாம லிருந்து நீயும்
பொய்மாய்கை யென்பதெல்லாந் தள்ளுதள்ளு
ஆச்சென்று மனமுரைத்து நின்றாயானல்
அப்பலத்தான் பதஞ்சேர அறிவுதோணும்
மூச்சென்ற திரேகமடா யிந்தக்காயம்
முன்னில்லை பின்னில்லை முக்கால்பாரு
பாச்சென்ற பாழ்மாய்கை யெல்லாம்போகப்
பராபரையைப் பூசித்துப் பலனைக்காணே. (291)

பலனென்ன யிப்பூசை பலனைப்பாரு
பரதேசிக் காவலனைப் பணிந்து நீயும்
பலனென்ன பாக்கியத்தை யாண்டபேர்க்குப்
பலன்கிட்டு மென்பார்கள் பாரின்மீதில்
பலனென்ன வேதாந்தம் பார்த்தபேர்க்குப்
பலனுண்டு பரியாசம் பகரப்போமோ
பலனென்ன தேவதைக்குப் பகரவேண்டாம்
பரதேசிக் கன்னமது பகரவேணும். (292)

வேணுமென்று யெந்தனக்குச் சொல்லவந்த
வேதாந்த சிவமயமே விளம்பக்கேளீர்
காணுமென்ற ரூபமெல்லா மழிவதேது
கன்னிவசம் மணவாளன் கடம்பனுமோ
தோணுமென்ற ரூபவல்லி வேதாந்தமெங்கே
தொல்புவியை அளந்தவருந் தானுமெங்கே
நானுமென்ற நாதனங்கே யிருந்தவீட்டில்
நமசிவய மென்றெழுத்து மறைந்ததெங்கே (293)

மறைந்தவகை முன்சொன்ன மார்க்கங்கேளு
மறைநான்கு மறியாத வயலொன்றுண்டு
கறைந்தவெள்ள முருவான கரிசல்குள்ளே
காசினியில் யாவருங்கை தொழுதநாட்டில்
வறைந்தமல ராயிரத்தெட் டிதழுக்குள்ளே
வரும்வெள்ளம் வரும்வழியே லிங்கமாச்சு
குறைந்தமதி நிறைந்தவித மிதனுக்குள்ளே
குறையில்லாப் பூரணமே தெய்வமாச்சே. (294)

தெய்வமடா தெரிசனத்திற் கண்டபோது
　　தேவரொடு முனிவர்களுங் காணமாட்டார்
கவசமடா கைவல்யந் தன்னைப்பாரு
　　கருத்திலே தோணுமடா கண்டுபாரு
சைவமடா சாயுட்ச பதவியாகும்
　　சகலருக்குந் தெய்வஞ்சண் முகனுமாச்சு
யெய்துமடா பேரின்பங் கனையிலலே
　　யிதமறியா மூடர்களெ யெய்துபாரே. (295)

யெய்துபா ரென்றுசொன்ன குருவே அய்யா
　　யெக்காலந் துயரமெல்லாந் திருமோசொல்
வயதுமே பத்தான கன்னிதானும்
　　வையகத்தி லடிமையெனக் கொள்வதெப்போ
செய்துபா ரென்றுமே சொல்லவேண்டாம்
　　செய்கரும மெந்தனுக்குச் சொல்லவேணும்
மையதுபார் காமனுட பாணந்தானும்
　　மார்பில்தைக் காமல்மனம் காட்டுவீரே. (296)

மனங்காட்டு மென்றுசொன்ன மகனேகேளு
　　மறைநான்கு மறியாத மகாதேவர்தானும்
தனங்காட்டுந் தலங்காட்டு மிந்தநூலில்
　　தவத்தினுட மகிமையெல்லாந் தானேகாட்டும்
வனங்காட்டு மனங்காட்டும் வறுமை நீங்கி
　　வாதத்தி லாசைவைத்தால் வறுமைகாணும்
செனங்காட்டுந் தடங்கையா னெம்பிரானும்
　　சிவன்செயலாம் வேறுண்டோ செப்பொண்ணாதே.

செப்பொணா தென்றுசொன்ன குருவே அய்யா
　　செயங்கொண்டக் கினியேந்தித் திரிவதேது
கப்பொணா தென்றுசொன்ன கெவுரிதன்னை [லும்
　　கழுத்திலே அணிந்ததென்ன கருத்தைச்சொல்
தப்பொணா தொன்றுமில்லை யுலகுதன்னில்
　　தவறாமல் நானடியேன் கேட்கவந்தேன்
ஒப்பான தென்றறிந்து அடியேற்கிப்போ
　　ஒழியாம லின்னதென்று காட்டுவீரே. (298)

காட்டுமென் று யெந்தனையே கேட்கவந்த
கருத்துள்ள சுந்தரமே கேளுகேளு
சாட்டவே சாகரங்க ளேழுமாச்சு
சமையமென்றால் குறிப்புக்கு அருத்தமாச்சு
வேட்டவே வேசியாபோலலையை வேண்டாம்
வேதாந்த சிவமயத்தின் பாதம்போற்று
ஆட்டவே அருந்தவத்தோர் தனக்குத்தெய்வம்
அய்யன்தான் கலங்கண்டால் பலன்காண்பாரே.

உரைத்த மொழி வேதனுட யாகசாலை
ஒருவருக்கு மாகாத வேதனுடு
மறைத்தமொழி மஞ்சளடா மாரியானால்
மகாதேவ ரெந்தனக்கு மகிழ்ந்தவாக்கு
பரத்தைமொழி பலவிதங்கள் பேசினாப்போல்
பாடினா ருலகத்திற் கோடாகோடி
தரத்தைமொழி கேட்டிருந்த தந்தைபோல
தற்கமிட்ட சுந்தரமே பொருத்தேனப்பா. (300)

பெருத்தேனென் றுரைத்தபுண்ய மூர்த்தி அய்யா
பொக்கிஷத்தைக் கேட்டாலும் பொருமைவேண்
வருத்திவைத்த வருத்தமெல்லாந் தீர்வதற்கு [டும்
வந்தாண்ட குருநாதா அடியேனுக்கு
பொத்திவைத்த தீபமது நாட்டினாப்போல்
பொருளறிந்து யெந்தனுக்குச் சொல்லவேணும்
கருத்தரித்த வுடலுக்குள் காயமானாப்போல்
காட்டவே வேணுமையா கைலைநாதா. (301)

கைலையிலே கண்டதொரு கர்த்தன்தானும்
கார்வண்ணன் மாயத்தில் வந்ததேது
கைலையிலே தான்பிறந்த முருகர்தானும்
கன்னியரை மாலையிட வந்ததேது
கைலையிலே வைத்திருந்த காவற்காரன்
கண்ணனுக்குப் பகையாளி யானதேது
கைலையிலே கண்டதொரு கரியமாலும்
கருங்கடலிற் பள்ளிகொண்ட கருத்துஞ்சொல்வீரே.

கருத்தாலே நானடியேன் கேட்கவந்தேன்
கற்பனையை யின்னதென்று கருதவேணும்
கருத்தாலே கேட்கவந்த சுந்தரமேகேளு
கைலைமகா மேருவிலே கர்த்தன்கூத்து
கருத்தாலே கண்டவர்க ளொருவரில்லை
காசிமுதற் கன்னிவரை யாத்தாள்கூத்து
பொருத்தமொரு பொருமையினு லெல்லாங்காணும்
பொறிகளைந்துங் கலங்காமல் நிலையில்நில்லே (303)

நில்லாமல் மேருதனிற் தவசியாகி
நிலைகாணச் சமுத்திரத்தை நீஞ்சி நீங்கள்
கல்லாமற் கற்றகல்வி யார்க்குமுண்டோ
கருங்கடலில் கார்வண்ணன் பிறப்பதேது
அல்லாமல் வேதனுக்கு அரிதந்தையேது
ஆலமுண்ட கண்டருக்கு மாத்தாளுக்கும்
சொல்லாமற் பெரியதாய் வந்ததேது
சொர்க்கமென்ற வீடுதனைக் காட்டவேணும்.(304)

வெல்லவே யிதையறிந்து உரைத்தனுதா
வேதனுக்கு நால்சிரசு வந்ததேது
அல்லமா லாலிலையிற் துயின்றதேது
அலைகடலி லேயமூர்தங் கடைந்ததேது
வெல்லாமல் வேதனுக்குத் தெய்வமாரு
வேதாந்த சிரோன்மணியே குருவேசொல்லும்
சொல்லாம லிதையொளித்தால் தர்மமாமோ
சொற்பெரிதாய் நின்றதொரு மூலனுதா. (305)

மூலத்தே நின்றதொரு சத்திதானும்
முக்கண்ண ரிடபாகம் வந்ததேது
ஞாலத்தைப் படைத்ததொரு யீசன்றானும்
ஞானியற்குத் தெய்வமது வானதெங்கே
ஆலத்தை யுண்டசதா சிவன்தனக்கு
அக்கினியாங் கண்வந்த விபரஞ்சொல்லும்
கோலத்தைக் கொண்டதொரு அத்தர்தானும்
குமரனைப் பெற்றதொரு விபரஞ்சொல்லும்.(306)

சாலத்தைக் கண்டதொரு சாம்பான்தானும்
சத்தியென்ற மார்க்கமதைப் பார்க்கவேணும்
வேலத்தைப் படைத்தயீசன் கையிற்சூலம்
வேதனும் ருத்திரனு மானதெப்போ
சீலத்தைச் சிவாயநம வென்றநாமம்
திரிபுரைக்குஞ் சீஷனுக்கு முண்டோசொல்லும்
சேலொற்ற கண்படைத்த பேதையற்குச்
சிறையிருந்தால் மதிநின்ற யிடஞ்சொல்வீரே.()

நின்றவிடம் போனவிடம் நிலைமைச்சொல்லும்
நிராமயமாய் நின்றதொரு யெழுத்தைச்சொல்லும்
கண்டவிடம் பூரணத்தின் கலையைக்காட்டும்
கற்புடைய மங்கையற்குத் தெய்வமாரு
உண்டயிடம் உறங்குமிட மிரண்டுஞ்சொல்லும்
ஊமையென்ற வெழுத்திலே கலந்ததெப்போ
அண்டவிட மில்லாத அசுரருக்கு
அரண்மனையும் பெருந்தவசும் வந்ததேதோ.(308)

கண்டவள்ளி தனைக்கார்க்கும் கணபதிக்குக்
காலகண்டன் தகப்பனென்று சொல்வதேது
கண்டவிடந் தனில்துயின்ற திருமாலுக்குக்
கன்னியர்க ளெட்டான விதத்தைக்காட்டும்
அண்டவிட மில்லாத அந்தரத்தில் [லும்
அருந்தவத்தோர் நின்றதொரு நிலமைசொல்
அண்டமிட மறிந்தவனே தெய்வமாகும்
அருந்தவத்தோர் காணாத அய்யன்தானே.(309)

அய்யனே யென்குருவே யாகுமாகும்
ஆதார மானசிவந் தன்னைக்காண
அய்யனே தினமுமணி பூசைபண்ண
அருந்தவத்தால் கண்டவர்கள் சொல்வாரப்பா
அய்யனே அருந்தவத்தோர் தெய்வமாகும்
ஆறணிந்தோன் மகிமைதனைக் காணப்போமோ
அய்யனே ஆதார மானோர்காணும்
அவரவற்குந் தெய்வமென்ற தான்தான்பாரே.()

பாரென்று யெந்தனுக்குச் சொல்லவந்த
　　பரதேசி காவலனே பகரக்கேளீர்
பேரொன்று மில்லாத தேவருக்குப்
　　பேர்வந்த விபரமதைப் பிரிக்கவேணும்
ஆரென்றுந் தீயென்று மாவதேது
　　அம்பலத்தான் சடைதனிலே யிருப்பதேது
காரென்று கலப்பைமுனை தன்னைக்கார்க்கும்
　　கார்முகில் மேனியனார் கண்ணார்தாரே. (311)

தாரென்ற மாலைதனை யணிந்தயீசன்
　　சாம்பல்மேல் பள்ளிகொண்ட விபரமென்ன
பேரென்ற பேர்கள்வந்த விபரமென்ன
　　பேசரிதாய் நின்றதொரு நிலையைச்சொல்லும்
ஊரென்றுந் தேசமென்றுஞ் சொல்வதென்ன
　　உற்றோர்கள் தெய்வமாய் வந்ததேது
சீரென்றும் வரிசையென்றுஞ் செப்பொண்ணாத
　　செகசாலக் கூத்தையினிச் செப்புவீரே. (312)

கூத்தான வீராப்பு மெத்தப்பேசும்
　　கூருகெட்ட மானிடற்குக் குருவைச்சொல்லும்
ஆத்தாள்தன் பூசையிலே வைத்தவஷ்த்து
　　ஆதாரவாய் வைத்திருந்த சுத்தியாரு
காத்தான்தன் ரூபமதைக் காணுமற்றான்
　　கலங்கிநின்ற மார்க்கமதைக் காட்டவேணும்
மாத்தான மாரணத்தின் பேரைச்சொல்லும்
　　மணிக்கைகுறி காட்டுகிற விபரஞ்சொல்லே. (313)

சாத்தான்றன் பூசையொன்று சொல்லவேண்டும்
　　சஞ்சலங்க ளூடறுத்த சாமிநாதா
தோத்தாத வீராப்புச் சொல்லவேண்டாம்
　　தொல்புவியி லுள்ளபடி அலங்கவேணும்
தீத்தாத வீடுகட்டி வைத்தபேர்க்கு
　　திருவுளத்தின் மகிமைதனைக் காட்டவேணும்
நாத்திசையுங் கொண்டாடுந் தாயாராரு
　　நல்லகெதி தருஞ்சாமி நவிலுவீரே. (314)

சாமியென்ற பிரணவத்தின் தெய்வமாரு
சரஸ்பதிக்குத் தகப்பனார் தாயுமாரு
வாமியென்ற வாமமது வந்தவாரும்
வன்னியுட தாய்தமரு மெனக்குச்சொல்லும்
மாமியென்ற மாதினுட மாமனாரு
மகாதேவர் தனக்குமொரு தெய்வமுண்டோ
பூமியென்ற மாதுக்குத் தெய்வமாரு
பூதலத்தில் புண்ணியரே புகலுவீரே. (315)

காமியென்ற கன்னிக்குக் கணவனாரு
கைப்பொருளில் லாதார்க்குத் தெய்வமாரு
சோமனென்ற சந்திரனுந் தேய்ந்ததெப்போ
சொற்பெரிதாய் நின்றவிடந் தன்னைக்காட்டும்
பாமியென்ற பரமகளை யிடத்தில்வைத்த
பரமசிவ னென்றவரை யளைத்ததாரு
வாமியுட வேலனுக்குத் தந்தையாரு
பழுதறவே யெந்தனக்குப் பகருவீரே. (316)

பகரவே பசாசினுட தெய்வமாரு
பாரளந்தான் தாயாரு தகப்பனாரு
மகரமென்ற மீன்தனக்கு ராசியாரு
மகாபல சீவருக்கா தாரமாரு
நகரமென்ற வீட்டுக்குத் தெய்வமாரு
நாற்றிசையும் வெவ்வேறா யிருப்பதென்ன
சிகரமென்ற கோபுரத்தில் வாழ்ந்தபொம்மை
சிமந்தவகை யெந்தனக்குச் செப்பிடீரே. (317)

செப்பாத செப்படி வித்தையேது
செயசெயா வென்றதற்கு விபரமென்ன
தப்பாமற் தாதுவென்ற புவிதனக்குத்
தமிழறிந்த யென்குருவே சாமினாதா
குப்பாமற் கூப்பிக்கும் பிட்டதாரை
குருவுக்குக் குருவிருப்பா ரென்பதாரு
அப்பாம லப்பில்நின்ற தெய்வமாரு
அறுசமையக் கோளனென்ற தாரைச்சொல்லே.

கோளறிந்து சொல்லவந்த குருவேசாமி
கொம்பனையாள் தனையீன்ற தந்தையாரு
பாழறிந்த பெரியோர்கள் நின்றதெங்கே
பரமனென்ற பிரமனுக்குக் குருதானாரு
தேளறிந்த விஷந்தனக்கு உறவுமுண்டோ
தெளிவான ஞானவெளி காண்பதாரு
ஆளறிந்த மங்கையரைச் சேர்ந்தபேர்கள்
அம்பலத்தி லாடுகிற ஆட்டங்காட்டே. (319)

ஆட்டமென்று லைம்பூத அறிவுகூட்டம்
ஆனதொரு தத்துவத்தி லடக்கிப்போட்டீர்
கூட்டமென்ற கூட்டமெல்லாங் கூறை நீர்கள்
குறமகளைக் கைப்பிடித்த மார்க்கஞ்சொன்னீர்
பாட்டமென்ற பாட்டெல்லா மீதுக்குள்சொன்னீர்
பரமசிவன் தன்னருளைப் பகரவேணும்
நாட்டமென்ற யிருகண்ணின் விபரஞ்சொல்லும்
நல்வழிக்கு மார்க்கமதை நடத்திடீரே. (310)

தீயான அக்கினிக்குத் தந்தையாரு
திரிபுரத்தார் செய்தவத்தின் தெய்வமாரு
காயான பெண்ணாரு கனியுமாரு
கலந்துநின்ற உலகத்துக் காதாரமாரு
பேயான அலகைக்கு ஆதாரமாரு
பேசரிய மந்திரத்திற் குயிருமாரு
நாயான கோபமது நின்றதெங்கே
நல்லகெதி தந்தசிவ மய்யா அய்யா. (321)

அய்யனே யென்குருவே சாமிநாதா
அற்புதமே யென்னரசே அமரர்கோவே
மெய்யான பொருளேமே தினியோருக்கு
மேன்மைபுரி தேசிகனே குருவேசாமி
மெய்யனே உலகமெங்குஞ் செனித்தநாதா
மேலான தமிழுக்குப் பிறந்தமூர்த்தி
கய்யனே உனைத்தொழுது பணிந்துநின்ற
காளைநான் செய்தபிழை காத்திடீரே. (322)

காக்கவே கடனென்று காலில்வீழ்ந்தேன்
கபடநான் செய்தபிழை யெல்லாங்காரும்
பார்க்கவே பழம்பொருளைப் பகரவேணும்
பாவிநான் செய்தகுற்ற மெல்லாங்காரும்
ஆருக்குந் தெரியாது யிந்தமார்க்கம்
அசடனுன் தற்கமிட்டு அறிந்துகொண்டேன்
தீர்க்கவே யெந்தனக்குத் தெரியச்சொன்னீர்
திரிபுரையாள் அருளெனக்குத் தெரிவிப்பீரே.()

தெரியாமல் நானடியேன் செய்தகுற்றம்
தெளிவுள்ளோர் பொருத்திடுவீ ரெம்பிரானே
அரியாமற் செய்தபிழை யெல்லாங்காத்து
ஆளடிமை கொள்வதற்கு அடியனானேன்
பரியாமல் ஒருவருடன் பகராமல்தான்
படித்தவற்கு யிந்தனூல் பலிக்குமப்பா
தெரியாம லாருக்கு மீய்ந்தாயானல்
தேசத்தில் நாய்போலத் திரிவார்முற்றே. (324)



அகத்தியர் தற்க சாஸ்திரம் முற்றிற்று.



உ

பரமபதி துணை.

# NEW CATALOGUE OF BOOKS.

## புதிய புத்தக கெயாட்லாக்

இ. ராம. குருசாமிக்கோனார் ஸன்

புக்ஷாப் புதுமண்டபம், மதுரை.

## பச்சிலை மூலிகைகளின் தமிழ்

# சித்தவைத்திய அகராதி.

இதில் பச்சிலை, கடைச்சரக்கு, பூதச்சரக்கு, உபரசச் சரக்குகள் 120 பரிபாஷைப் பெயர்களையும், 25 உப்புவகை இனங்களையும், உப்பாகுஞ் சரக்குகளின் விபரத்தையும் வகாரம், செந்தூரஞ் செய்ய சரக்குகளின் உருக்கின சத்துருமித்துருவையும், புளியாகும் சரக்குகளின் விபரத்தையும், 64-பாஷாணங்களின் பெயர்களையும், அவைகளின் சத்துரு மித்துருவையும், நிகண்டுகளின் பரிபாஷைப் பெயர்களையும் விபரமாய்க் கூறியுள்ளது சித்தர் நூல்கள் ஆராய்ச்சிசெய்வோர்களும், வைத்தியஞ்செய்ய ஆரம்பஞ் செய்வோர்களும் இப்புஸ்தகத்தை வாங்கிப் பார்க்க வேண்டியது அவசியமாகையால் ஒவ்வொருவரும் வாங்கிப்பார்த்துப் படித்து இதின் உண்மையை அறிந்து மருந்துகள் செய்து பயனடையக் கோறுகிறேன். 280-பக்கங்கள்கொண்ட கலிக்கோபயிண்டு சுத்த பதிப்பு

புத்தகம் 1-க்கு விலை ரூ. 2—0—0

# அகஸ்தியர் சௌமதி நூல்

இந்த சாஸ்திரம் இதுவரை வெளிவாராமல் பழைய ஏட்டுப்பிரதியாக ஒரு சுவாமியாரிடமிருந்தது ஷையார் ஒருவருக்கும் வெளியிடாமல் தன்னனுபவத்தில் வைத்துக்கையாண்டுவந்ததை மகா-ா-ா-ஸ்ரீ இ. ராம. குருசாமிக்கோனரவர்கள் சுவாமியாரிடம் போய் வேண்டும் பொருள் கொடுத்து வாங்கி அதைப் பிரதி பண்ணி யாவரும்பார்த்துப் பயனடையுமாறு அச்சிட்டு வெளியிடப்பட்டது. வைத்தியம், வாதம் மாந்திரீகம் முதலான பாகங்கள் இலகுவான முறைகளாகச்சொல்லியிருக்கிறது. வெகு அருமையான சாஸ்திரம்

புத்தகம் 1க்கு விலை அணு 0—12—0

அகஸ்தியர் பன்னீராயிரத்துக்குச் சூஸ்திரமான

# பன்னிருகாண்டம்.

இது அகஸ்தியர் பன்னீராயிரத்துக்குச் சூஸ்திரமாகப் பன்னிருகாண்டங்களாகப் பாடியுள்ள சாஸ்திரம் 1.-வது வைத்திய காண்டம் 2.-வது வாத காண்டம் 3.-வது சுண்ணக்காண்டம். 4.-வது செந்தூரக்காண்டம் 5.-வது பற்பகாண்டம் 6.-வது தைலக் காண்டம் 7.-வது கற்ப காண்டம். 8.-வது யோக ஞான காண்டம். 9.-வது தீட்சாவிதி காண்டம். 10.-வது சாப நிவர்த்தி காண்டம் 11-வது ஜாலகாண்டம். 12-வது மந்திர காண்டம். ஆக பன்னிருகாண்டம் சுருக்க சூஸ்திரமாயுள்ளது.

புஸ்தகம் 1-க்கு விலை ரூ 0—10—0

# அகஸ்தியர் கற்ப மூப்புக் குருநூல்

இதில் கற்ப விதிகளும் மூப்பு முடிக்கும் விபரமும் பற்ப செந்தூர கைபாகஞ் செய்பாக முறைகளும் சுண்ணம் மெழுகு தைலம் வாலை பூசை நாற்பத்தி முக்கோண சக்கரத்தின் பூஜா விதிகளும் கற்ப தீட்சை முறைகளும் தெளிவாகச் சொல்லி யுள்ள சாஸ்திரம்.

புஸ்தகம் 1-க்கு விலை ரூ 0—10—0

மகா மகத்துவந் தங்கிய

# யூகிமுனிவர் 1200

கும்மி 1000, பரிபூரணம் 200 இரண்டு சாஸ்திரங்கள்.

இம்முனிவரால் பாடியுள்ள சாஸ்திரங்கள் அநேகமாயிருப்பினும் ஒவ்வொரு நூல்களும் ஒவ்வொருவர் கையடக்கமாய் வெளிவராமல் இருந்ததில் இந்த சாஸ்திரங்கள்மட்டும் என்னிடம் கிடைக்கப்பெற்று உலக நன்மையைக் கருதி அச்சிட்டு வெளியாக்கியுள்ளேன். இதில் வாதம், வைத்தியம், ஞானம், முப்பூ விபரங்கள் கூறியிருக்கின்றன. கலிக்கோ பயிண்டு புஸ்தகம் 1-க்கு விலை ரூ 2—0—0

பதினெண் சித்தர்களில் ஒருவராகிய

## இராமதேவர் வைத்திய காவியம் 1000

இதில் கற்பமுறைகளும், சத்துரு மித்துருச் சரக்குகளும், தைலமுறைகளும், வைத்தியமுறைகளும், அஷ்டகர்ம விபரங்களும், கருமான விபரங்களும், பஞ்சபூதங்களின்விபரமும், பற்பசெந்தூரம், சுண்ணம் செய்முறை பாகங்களும், அஷ்டாங்க யோகமுறைகளும், ஞானங்களும் கூறியிருக்கிற புஸ்தகம் 1க்கு விலை 1—0—0

# திருவள்ளுவர் கற்பம் 300

இதில் நாதாந்த சாரம் 100. கற்பக்குரு நூல் 50. முப்பு சூஸ்திரம் 30. வாத சூஸ்திரம் 16. முப்புச்குரு 11, வைத்தியசூஸ்திரம் 100 ஆக 7-சாஸ்திரங்கள் அடங்கியது. திருவள்ளுவர் பாடிய ஞானவெட்டி 1500க்கு சூஸ்திரமாகப் பாடியுள்ள சாஸ்திரம் இதுவேயாகும். இதில் குருமுடிக்கும் பாகங்களும், செயநீர் முடிக்கும் பாகங்களும் பூநீர் விபரங்களும், அமுர்த தாரணையின் நுட்பமும் முப்பூ இன்னதென்ற விபரமும், வழலைமார்க்கமும் தெளிவாகக்கூறியுள்ளது புத்தகம் 1-க்கு விலை ரூ. 0—14—0